# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 2 விளைச்சல் : 16 திருவள்ளுவர் ஆண்டு 2052 செப்டம்பர்த் திங்கள் - 2021



# ஊர்திகளுக்கான கலைச்சொற்கள்

| | |
|---|---|
| 1.Jeep- | கரட்டுந்து |
| 2.Tractor- | இழுவையூர்தி |
| 3.Double decker bus- | ஈரடுக்குப் பேருந்து |
| 4.Metro train- | மாநகரத் தொடரி |
| 5.Non-stop bus- | இடைநில்லாப் பேருந்து |
| 6.Sleeper bus- | படுக்கைப் பேருந்து |
| 7.Air condition bus- | குளிரூட்டப் பேருந்து |
| 8.Mini bus- | சிற்றுந்து |
| 9.Mini lorry- | சிறு சரக்குந்து |
| 10.Auto- | தானி |
| 11.Share auto- | பங்குத்தானி |
| 12.Van- | மூடுந்து / கூடுந்து |
| 13.Road roller- | சாலையுருளை |
| 14.Truck- | வல்லுந்து |
| 15.Porter- | சுமையுந்து |
| 16.Container lorry- | கொள்கல ஊர்தி |
| 17.Crane- | சுமைதூக்கி |
| 18.Car- | மகிழுந்து |
| 19.Bus- | பேருந்து |
| 20.Air bus- | மிதவைப் பேருந்து |
| 21.Aeroplane- | வானூர்தி |
| 22.e-cycle- | மின் மிதிவண்டி |
| 23.City bus- | மாநகரப் பேருந்து |
| 24.Town bus- | நகரப்பேருந்து |
| 25.Helicopter- | உலங்கூர்தி |
| 26.Tempo- | குறுஞ்சரக்குந்து |
| 27.Tanker lorry- | தாங்கல் ஊர்தி |
| 28.Tipper lorry- | கொட்டுந்து |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2052 - ஆவணி

செப்டம்பர்த் திங்கள் 2021

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன

# அகராதி வந்த பாதை

ஒரு மொழியிலுள்ள சொற்கள் அனைத்தையும் அகர நிரலில் அமையும்படி ஒருசேரத் தொகுத்து அவற்றின் பொருள்களை அம்மொழியாலேனும் பிறமொழியாலேனும் விளக்கும் நூல் அகராதி எனப்படும். அகராதி என்னும் சொல்லிலுள்ள "ஆதி" என்னும் சொல் வடமொழி என்ற கருத்தில் "மொழிஞாயிறு"தேவநேயப் பாவாணர் அவர்கள் அகரமுதலி என்று அழைத்தார்.

சொல்லின் பொருளைத் தவிர அதன் தோற்றம், ஆட்சி, அது இடம்பெற்றுள்ள நூல், வருமிடம் முதலியவற்றையும் பேரகராதிகளில் நாம் காணலாம். சொற்களைப் பற்றிய ஆய்வும் சொற்களஞ்சிய உருவாக்கத்திற்கான தொடக்கமும் தொல்காப்பியத்தில் சுட்டப்பட்டுள்ளன.

காலப்போக்கில் சொற்றொகுதியின் தேவையை அறிந்து நிகண்டுகள் உருவாக்கப்பட்டன. கி.பி. 8ஆம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்ட நிகண்டு ஆக்கம் அகராதிக்கலை வளர்ச்சியில் தொன்மையானது. நிகண்டுகளில் பழமையானது திவாகரம் ஆகும்.

சொற்களை அகர வரிசையில் தொகுத்துப் பொருள் தரும் முறையானது இந்தியாவிற்கு வந்த மேலை நாட்டாரின் தொடர்பால் ஏற்பட்டது. அரசியல், வணிகம், சமயப் பரப்புரை என இருந்த மேலைநாட்டினருக்கு இந்தியாவில் வாழ்ந்துகொண்டிருந்த மக்களின் தாய்மொழியைக் கற்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

இந்திய மொழிகளை அறிந்துகொள்ள அம்மொழி இலக்கணத்தை மேலைநாட்டு மொழிகளில் எழுதினர்; அகராதிகளை உருவாக்கினர். இதனால்தான் தொடக்கக் கால அகராதிகள் பெரும்பாலும் மேலைநாட்டவரால் உருவாக்கப்பட்டன.

கி.பி. 1679ஆம் ஆண்டில் அந்தோணி பிரயோன்சா போர்த்துகீசிய – தமிழ் அகராதிகளை உருவாக்கினார். வீரமாமுனிவர் சதுரகராதியை 1732இல் வெளியிட்டார். இன்று வரை தமிழில் நூற்றுக்கணக்கான அகராதிகள் வெளியாகியுள்ளன.

மொழியின் வளர்ச்சி நம் வாழ்க்கையின் வளர்ச்சியைப் பொறுத்தது. இம்மொழி வளர்ச்சிக்குச் சொல்லின் வளர்ச்சி, சிறந்த அறிகுறியாகும். நமது வாழ்க்கை வளம் பெறுவதால் சொற்கள் பெருகிக்கொண்டுதான் செல்லும்.

அகரமுதலிப் பணிக்குக் கால எல்லையே இல்லை. குறைபாடுகளைத் திருத்துவதும், சொற்களின் பிறப்பு வரலாற்றை மொழிநூல் முறையில் உணர்த்திக் காலம் கணிப்பதும், சொல்லின் வடிவங்களையும், பொருள்களையும் கால நிரலில் வரலாற்று முறையில் நிறுவி இன்ன சொல் இன்ன காலத்தில் இன்ன பொருள் பெற்றது என்ற விளக்கங்களை நூல்களின் அடிப்படை கொண்டு தெளிந்து உணர்த்தலும், புதுச்சொற்களைச் சேர்த்தலும், கலைக் குறியீட்டு மொழி அகராதிகள், சொற்பிறப்பு அகரமுதலிகளை இயற்றுவதும் தமிழ்மொழி வளர்ச்சிக்கு இன்றியமையாத பணிகள் ஆகும். தமிழர் அகரமுதலியையொத்துப் பயன்படும் நூல்களை 'உரிச்சொல் பனுவல்' என முற்காலத்தில் வழங்கினர். தொல்காப்பியரும் சில சொற்களுக்குப் பொருள் விளக்கம் செய்துள்ள பகுதிக்கு 'உரியியல்' என்றே பெயரிட்டார்.

மொழிக்காப்பு ஆவணமாக விளங்கும் அகராதி உருவாக்கத்திற்கென்றே தமிழ்நாடு அரசு 1974ஆம் ஆண்டு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தைத் துறைத்தலைமை இயக்ககமாகத் தோற்றுவித்தது.

இவ்வியக்ககம் சொற்பிறப்பியல் பேரகரமுதலிகளை வெளியிட்டுள்ளதோடு, காலத்திற்கேற்றவாறு பல்வேறு வகையிலான அகராதிகளையும் வெளியிட்டு, இடைநிற்றலின்றித் தொடர்ந்து அகராதிப் பணியினை மேற்கொண்டுவருகிறது.

அறிவியல் வளர்ச்சி காரணமாகத் தமிழில் உருவாக்கப்பட்ட கலைச்சொற்களின் தொகுப்பான அகராதிகளும், ஆட்சிமொழி அகராதிகளும் பல்துறை சார்ந்த அகராதிகளும்

இன்று அதிக அளவில் வெளியாகிக் கொண்டிருக்கின்றன.

31.08.2021ஆம் நாள் நடைபெற்ற தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை மானியக் கோரிக்கையின்போது மாண்புமிகு தொழில்கள், தமிழ் ஆட்சிமொழி (ம) தமிழ்ப் பண்பாடு, மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் திரு.தங்கம் தென்னரசு அவர்கள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின்கீழ், புதிய கலைச்சொற்கள் உருவாக்கத்தை இணையவழியில் அறிமுகம் செய்தல், மொழியியல் அறிஞர்கள், துறைசார் வல்லுநர்கள், தமிழ் ஆய்வாளர்கள், ஆர்வலர்கள் ஆகியோர் அடங்கிய தனிக்குழு ஒன்றை அமைத்து, கலைச்சொற்களைத் தரப்படுத்துதல் ஆகியவற்றிற்கெனத் தொடர் செலவினமாக ரூ. 5 இலட்சம் நிதி ஒதுக்கீடு செய்யப்படும் என்று அறிவித்துள்ளார்.

தமிழ்க் கலைச்சொற்கள், அகராதிகளின் பயன்பாட்டுப் பரவலாக்கம் என்னும் நோக்கின் அடிப்படையில் அறிவிக்கப்பட்டுள்ள இதுபோன்ற திட்டங்கள்யாவும் தமிழ்மொழியின் வளர்ச்சியில் தமிழ்நாட்டு அரசுக்கு உள்ள அக்கறையின் மேலீட்டினால் வகுக்கப்பெற்றுள்ளன என்பதைத் தமிழ்கூறு நல்லுலகம் நன்குணரும். அந்தவகையில், தமிழ்மொழி, தமிழினம், தமிழ்நாடு ஆகியவற்றின் முன்னேற்றத்திற்காக நல்ல பல ஆக்கத் திட்டங்களை உருவாக்கிச் செயற்படுத்திவரும் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு.மு.க.ஸ்டாலின் அவர்களுக்கும், துறையின் வளர்ச்சிக்குச் சீரிய முறையில் செயலாற்றிவரும் மாண்புமிகு தொழில்கள், தமிழ் ஆட்சிமொழி (ம) தமிழ்ப் பண்பாடு, மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் திரு.தங்கம் தென்னரசு அவர்களுக்கும், அகரமுதலி இயக்ககத்தின் செயற்பாடுகளுக்கு நல்லதொரு ஊக்கத்துணையாக விளங்கும் தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசு செயலாளர் திரு.மகேசன் காசிராசன் இ.ஆ.ப. அவர்களுக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் மனங்கனிந்த நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்கிறேன்.

மொழியும் கால மாற்றத்திற்கு உட்பட்டது என்பதால் சொற்கள் தோன்றுவதும், வழக்கொழிவதும் வாலாயமான ஒன்று



தான். எனவே தொன்மைச் சொற்களை அறியவும், புதிய சொற்களைப் பதியவும், சொற்பொருள்–மக்களின் மரபுசார் பண்பாடு–வரலாறு ஆகியவற்றைப் பாதுகாக்கவும் ஆகச் சிறந்த தமிழ்ப் பேரகாதிகளை இயற்றுதல் தமிழ் அறிஞர்களின் கடமையாகும். அகராதிகளையும், காலத்திற்கேற்ற புதிய கலைச்சொற்களையும் உருவாக்குவதன் முழு வெற்றி அவற்றைப் பொதுமக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுசெல்வதில்தான் நிறைவுபெறுகிறது.

அந்தவகையில், சொல்லாய்வுகள், சொல்லாக்கங்கள், அகராதியியல், மொழியியல் சார்ந்த கருத்துகள் மற்றும் இயக்ககச் செயற்பாட்டுச் செய்திகள் உலக மக்களுக்குச் சென்றடையும் வகையில் அகரமுதலி இயக்ககத்தால்



திங்கள்தோறும் வெளியிடப்பெறும் “சொல்வயல்” மின்னிதழுக்குத் துணைநிற்கும் தமிழறிஞர்களுக்கும், தமிழார்வலர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த இதழில், ஐரோப்பிய அகராதியியல் தொடக்க வரலாறும் வளர்ச்சியும் குறித்தும், 1983இல் தொடங்கி, வரவிருக்கிற 2022ஆம் ஆண்டு வரையிலான நடைபெற்ற, நடைபெறவுள்ள ஐரோப்பிய அகராதியியல் மாநாடுகள் குறித்தும் விரிவான ஆய்வுக்கட்டுரையை வழங்கி இதழுக்குச் சிறப்புச் சேர்த்திருக்கிற பாரிசு, பன்னாட்டு உயர்கல்வி நிறுவன இயக்குநர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களுக்கும், “எள்” என்னும் சொல் குறித்து நல்லதொரு கட்டுரை வழங்கிய திரு.அண்டனூர் சுரா அவர்களுக்கும், வழக்கிலிருந்து விலகிவிட்ட “மூதாளர்” என்ற பழந்தமிழ்ச் சொல்லை மீள நினைவுறுத்தும் வகையிலான ஒரு கட்டுரையை வழங்கிய முனைவர் பா.ஜெய்கணேஷ் அவர்களுக்கும், பாவாணரின் குறிப்புகளின் அடிப்படையில், மாணவர்கள் நிலையிலிருந்து சொல்லாய்வும் சொல்லாக்கமும் குறித்துக் கட்டுரை



வழங்கியுள்ள செல்வன் க.முத்துவிக்னேஷ் அவர்களுக்கும் நன்றியையும் பாராட்டையும் தெரிவிப்பதில் மகிழ்கிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒன்றிணைந்து செயலாற்றுவோம்...

# ஐரோப்பிய அகராதியியல் தொடக்க வரலாறும் வளர்ச்சியும்



முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்
இயக்குநர்,
பன்னாட்டு உயர் (கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு

ஐரோப்பா அன்றும் இன்றும் உலகம் முழுவதற்கும் அறிவியற்புலமாகத் திகழுகின்றது. உலக நாடுகளில் ஐரோப்பிய மொழிகளே அதிகம் வழங்கப்படுகின்றன. உலகில் ஐரோப்பிய மொழிகளிலேயே அகராதிகள் மிகுதியாகத் தொகுக்கப்படுகின்றன; வெளிவருகின்றன. உலக மொழிகளில் அகராதிகள் உருவாக்கத்திற்கும் அதன் வளர்ச்சிக்கும் ஐரோப்பிய அகராதியியல் பெரும்பங்கு வகிக்கின்றது. ஐரோப்பிய அகராதியியலைப் புறந்தள்ளிப் பெறும் அகராதியியல் அறிவு முறையானதாகவோ, முழுமையானதாகவோ அமையாது.

ஐரோப்பிய அகராதியியலின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் கிறித்தவம் அடிப்படையாக இருந்திருக்கிறது. ஐரோப்பிய மொழிகள் அனைத்திலும் ஊடுருவிய மொழி இலத்தீன். இலத்தீன் கிறித்தவத்தின் காவலன்.

இலத்தீனிய எழுத்துகளை மொழி அடையாளங்களாகக் கொண்ட இலத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம், இத்தாலியம் ஆகிய மொழிகளின் அகராதிகளின் தொடக்க வரலாறும் வளர்ச்சியும் பற்றியே இக்கட்டுரை ஆராய்கிறது.

## ஐரோப்பாவில் உள்ள எழுத்துமுறை வடிவங்கள்

மொழிகளுக்கு அடையாளம் தருவது எழுத்துகள். எழுத்துகள் இன்றி மொழிகளும் இல்லை! அகராதிகளும் இல்லை! ஐரோப்பாவில் உள்ள பல மொழிகளும் தமக்கே உரிய எழுத்துமுறை வடிவங்களால் எழுதப்படுகின்றன. ஆங்கிலம், பிரெஞ்சு, இஸ்பானியம், இத்தாலியம், ஜேர்மன், டச்சு முதலான மொழிகள் இலத்தீன் எழுத்துகளால் எழுதப்படுகின்றன. ஆங்கிலம் றுனிக் எழுத்து வடிவிலும், ஜேர்மன் கோதிக் எழுத்து வடிவிலும் எழுதப்பட்டு வந்தன.

இப்பெரிய கண்டத்தில் வழங்கப்படும் மொழிகள் அவ்வவ் மொழிகளுக்குரிய மொழிக்குடும்பத்து எழுத்துமுறை வடிவங்களால் கையாளப்படுகினறன.

இம்மொழிகள், 1. இலத்தீன் எழுத்துகள்.2. கிரேக்க எழுத்துகள். 3. சிறிலிக் எழுத்துகள். 4. கோதிக் எழுத்துகள். 5. ஒகாமிக் எழுத்துகள். 6. ஆர்மீனியன் எழுத்துகள்.7.ஜோர்ஜியன் எழுத்துகள் என ஏழுவகையான எழுத்து முறை வடிவங்களைக் கொண்டிருக்கின்றன

## ஐரோப்பிய மொழிகளின் உறவுகள்

ஐரோப்பாவில் உள்ள மொழிகளுக்கிடையிலான உறவுகள் எழுத்துகள், சொற்கள், இலக்கணம் ஆகியவற்றில் நெருங்கிய தோற்றத்தை உடையன. இம்மொழிகள் ஒரே மூதாதையிலிருந்து தோன்றினவையாக இருக்க வேண்டும் என மொழியியலாளர்கள் கருதுகின்றனர்.



1.அம்ப்ரோசியோ கலேப்பினோ



2. றொபேர்எஸ்தியென்



3. சாமுவேல் ஜான்சன்



4.ஜேக்கப் (ம)வில்லெம் கிரிம்.

## ஐரோப்பாவில் அகராதியைக் குறிக்கின்ற சொற்பதங்கள் :

மொழிகளில் அகராதிகளைச் சுட்ட சொற்கள் பல இருந்தாலும், டிக்ஷனரி Dictionary, வொக்காப்புலறி Vocabulary, லெக்ஸிக்கன் Lexicon என்கிற சொற்களே நடைமுறையில் எல்லோராலும் பரவலாகப் பயன்கொள்ளப்படுகின்றன. இவை முறையே Dictionnarium,Vocabularium,Lexikon என்ற சொற்களிலிருந்து தோன்றியவை. முதலிரண்டும் இலத்தீன் மூலமும், மூன்றாவது கிரேக்க மூலமும் கொண்டவை.

## அகராதியைக் குறிக்கும் பிற சொற்கள்

Aalma,Abecedarium,Abicinarium, Abreviacio,Alphabetum,Alvearium,Breviarium, Catholicon,Compend ium,Comprhensorium, Cornucopiae, Elementarium, Elucidarius, Glosa, Glossarium, Hermeneumata,

Hortus, Interpretamentum, Lexicon (Lexicum), Litteris, Nomina(Noinalia), Partionarium, Promptuaum, Promptus, Repertorium,Summa,Synonyma,Tabula, Terminarius,Thesaurus,Verba (வினைச்சொல்லடை).

## ஐரோப்பிய அகராதியியல் – சுருக்க வரலாறு

ஹொமரின் இலியட்– ஒடிசியின் இலக்கியச்சொற்களுக்கு ஐந்தாம் நூற்றாண்டில்பொருள் விளக்கம் கொடுத்த சொற்புத்தகமே முதலாவது அகராதியாகக் கருதப்படுகிறது இதனைத்தொகுத்தவர் Protogoras. இலத்தீனில் முதலாம் நூற்றாண்டில் Verrius Flaccus என்பவரால் Designificationis verborum எனும் அகராதி படைக்கப்பட்டது. Aelfric de Canterbury என்ற ஆங்கிலேய மதகுரு 922–1002 காலப்பகுதியில் இலத்தீன்–சாக்ஸன் சொல்லகராதியையும், Nomina multarum rerum anglice எனும் இலத்தீன்–ஆங்கிலம் பெயர்ப் புத்தகத்தையும் யாத்தார். பிரான்சில் வாழ்ந்த John of Garlandeஎனும் ஆங்கிலேயப் பேராசிரியர் 1220 ஆண்டளவில் ஆங்கிலம் – பிரெஞ்சு – இத்தாலியம் – இலத்தீன் அகராதியைDictionarius என்ற பெயரில் எழுதினார். ஜெர்மனிய குருவான Jakob Twinger 1380–1390 காலப் பகுதியில் Glossarium latinum இலத்தீன்– ஜேர்மன்அருங்கலைச்சொல் விளக்கத்தைச் செய்தார்.

Adam von Rottweill எனும் பாதிரியார் 1477 இல் Introitoe e porta எனும் ஜேர்மன்–இத்தாலியம், இத்தாலியம்–ஜேர்மன் இருமொழி பொருட்புல அகராதியைத் தொகுத்தார்.

இதே காலப்பகுதியில் டச்சு– இலத்தீன், இலத்தீன்– டச்சு சொல்லடைவு ஒன்று Van de Schueren என்பவரால் தொகுப்பட்ட குறிப்பு பிரேக் (Prague) Charles University வெளியிட்ட Lexicography, Printing Technology, and the Spread of Renaissance Culture ( Patrick Hanks) எனும் நூலில் உள்ளது.

இங்கிலாந்தில் அச்சுப்பதிப்பு வேலையை William Caxton 1470 இல் அறிமுகம் செய்தார். இவர் Wynkyn de Worde என்பவருடன் இணைந்து French – English glossary யை 1480 ஆம் ஆண்டில் அச்சுப்பதித்தார். இத்தாலிய மதகுருவான Giovanni Crastone ( Piaecenza) 1497 இல் ஒரு கிரேக்கம்– இலத்தீன் பேரகராதியைத் தொகுத்து வெளியிட்டார். இதுவே கிரேக்கம் – இலத்தீன் முதல் அகராதியாகக் கருதப்படுகிறது.

இங்கிலாந்தில் முதல் வெளியிடப்பட்ட Promptorium parvulorum (Young people's Store room)எனும் ஆங்கிலம் – இலத்தீன் இருமொழிஅகராதி 1497இல் Richard Pyson ஆல் வெளியிடப்பட்டது.

10,000 தலைச்சொற்கள்(Lemm a–Headwords)கொண்ட இவ்வருஞ்சொற்கோவை 60 ஆண்டுகளுக்கு முன்னரே–1940 அளவில் Galfridus Anglicus (Galfridus Grammaticalus)என்பவரால் தொகுக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இது பின்னர் ஐரோப்பிய அகராதியியலில் தலைசிறந்தவர்களில் ஒருவரான Robert Estienneஆல் 1530இல் பாரிஸ் அச்சியந்திரச்சாலையில் அச்சிடப்பட்டது.

இத்தாலிய மதகுருவான Ambrogio Calepino (1450–1511)1502 இல் Cornucopiae (Dictionarium latinum) இலத்தீன் ஒரு மொழி அகராதியை உருவாக்கினார். அகரநிரலில் சொற்கள் ஒழுங்குபடுத்தப்பட்டிருந்தது. கலேப்பினோ எனும் சொற்பிரயோகம் அகராதி என்பதற்குப் பதிலீடாகக் கையாளப்பட்ட சொல். பதினாறாம் நூற்றாண்டில் பாடசாலைகள் தொடக்கம் பல்கலைக்கழகம் வரையும் கலைக்களஞ்சியம் போன்று பயன்பட்டது.

## 1516 இல் வெளிவந்த கலேப்பினோ மீள்பதிப்பு

பிரான்சில் முதல் அகராதி அமைத்தவர் எனும் பெருமை பிரெஞ்சு அகராதியியலின் தந்தையான Robert Estienne அச்சகக்காரரையே சேரும். இவர் Dictionarium Seu Thesaurus Lingua




அதே அகராதியின் இலத்தீனியச் சொற்களுக்கு, கிரேக்கம், ஹீப்று, இத்தாலியம் மொழிச்சொற்களைச் சேர்த்து சதுர்மொழி அகராதியாகத் தொகுப்புச் செய்து Dictionarium polyglotte என 1509 இல் வெளியிட்டார் கலேப்பினோ.

பன்மொழிப் பேரகராதியாக ஆக்குவதற்கு தன்வாழ்நாளையே செலவிட்டதனால், இந்த அகராதியே முதல் பன்மொழி அகராதியாகப் பதிவு கொண்டுள்ளது. இவரின் மறைவிற்குப் பின்னர் இவர் தொகுத்த அகராதி பொதுச்சொத்தாக ஆகியது.

மேலும், பிரெஞ்சு, இஸ்பானியம், ஜேர்மன், ஆங்கிலம், போலந்தையம், ஹங்கேரியம், போர்த்துக்கேயம், ஜப்பானியம் மொழிச்சொற்களும் கொண்டு, "Ambrosii Calepini dictionarium undecim linguarum" பதினொரு மொழி பேரகராதியாக வெளிவந்தது. ஐரோப்பாவில் இருநூற்றாண்டுகளாகப் பதிப்பிக்கப்பட்ட பயனுடைய பேரகராதி கலேப்பினோ.

Latinae - இலத்தீன் சொற்கருவூலம் எனும் இலத்தீன் ஒருமொழி அகராதியை 1531 இல் அச்சிட்டுப் பதிப்பித்தார். அடுத்து இங்கிலாந்தில் John Withals என்பவர் 1533 இல் A Short Dictionarie for Yong Beginners சிற்றகராதியையும், Sir Thomas Elyot என்பவர் 1538 இல் Dictionary : Latin - English இலத்தீன் – ஆங்கிலம் அகராதியையும் எழுதினார்கள்.

பின்னர் பிரான்சில் Robert Estienne என்பவர் 1539 இல் Dictionaire : François - Latin பிரெஞ்சு – இலத்தீன் அகராதியையும் அச்சேற்றினார். இதனை அடிப்படையாகக்கொண்டு பிரெஞ்சு ஒரு மொழி அகராதியை Le Thresor de la langue françoise tant ancienne que moderneஎனும் பெயரில் Jean Nicot (1530-1600) என்பவர் தொகுத்தார். ஆனால் இவ்வகராதி இவர் இறந்த பின்தான் 1606 இல் அச்சுவடிவில் பிறந்தது.

## அச்சுக்கலை கண்டுபிடிப்பும் அகராதியியல் வளர்ச்சியும்

உலகநாடுகளில் ஐரோப்பாவில் தான் அகராதியியல் துறை தொடர்பான முயற்சிகள், சோதனைகள், தேடல்கள் அதிகம் மேற்கொள்ளப்பட்டன. மொழி எழுத்துகளின் சீர்திருத்தம், அச்சியந்திரம் கண்டுபிடிப்பு, அச்செழுத்துகளின் திருந்திய வடிவம், இலத்தீன் மொழிக்குக் கிறித்தவ மதகுருமார்களின் பாதுகாவல், அகராதியியலாளர்களின் அகராதித்தொகுப்புப் பணிகள் என்பன அகராதியியல் நுட்பத்தில் முகாமையான பங்கு கொண்டிருந்தன. ஏனெனில் மத்தியகாலப் பிற்பகுதியில், ஐரோப்பா முழுவதும் சொற்கள் திரட்டிச் சொல்லடைவுகள் Glosses உருவாக்கும் வேலைகள் கிறித்தவ மடாலயங்களிலேயே கையெழுத்துப்படிகள் பழஞ்சுவடிகளில் பதிவு செய்யப்பட்டன.

இவ்வாறாகத் தொகுக்கப்பட்ட சொல்லடைவுகளில் பெரும்பாலானவை அகரநிரலில் அல்லது பொருட்புல நிரலில் இலத்தீன் மொழிச்சொற்களுக்கு இணையான அந்தந்த ஐரோப்பியநாட்டு சுதேசியமொழிச்சொற்கள் Vernacular languages சேர்த்துத் திரட்டப்பட்ட இருமொழிச் சொல்லடைவுகளாக அமைக்கப்பட்டன. மடாலய இளம் துறவிகள் இலத்தீனைக் கற்பதற்கு வழிவகை செய்யும் நோக்கத்திலேயே இவை உருவாக்கப்பட்டன.

ஐரோப்பாவில் பதினைந்தாம் நூற்றாண்டில் அச்சுக்கலை கண்டுபிடிக்கப்பட்டு வளர்ச்சி அடைந்ததன் விளைவாக ஐரோப்பிய அகராதியியலில் திருப்புமுனை ஏற்பட்டது.

அகராதியியல் வளர்ச்சியின் கூறுகளாக அச்சுக்கலை கண்டுபிடிப்பு, பாரம்பரிய இலத்தீனிய இலக்கியம், மெய்யியல் மற்றும் கலை, சவாலான சிந்தனைச் செயற்பாடுகள், மீள்கட்டமைப்பு என்பன அமைந்தன.

இத்தாலியின் வெனிஸ் நகரத்தில் George Von Nurnberg என்னும் அச்சகக்காரர் ஜேர்மன் – வெனிசியன் சொல்லகராதியை 1424 இல் பதிப்பித்தார். ஜெர்மனியரான Johannes Gutenberg என்பவர் 1440 இல் அச்சடித்தல் முறையைக் கண்டுபிடித்ததுடன் மனிதனின் அனைத்து அறிவியல் துறைகளிலும், குறிப்பாக ஐரோப்பிய அகராதியியலில் பெரும் முன்னேற்றம் ஏற்பட்டது. இதன் அறுவடையாக வேதாகமத்தையும்அகராதிகளையும்அச்சேற்றும் பணி ஐரோப்பியநாடுகளில் பரவலாக நடைபெற்றது. இவ்வாறு இவரால் அச்சுவடிவம் பெற்றவற்றில் ஐரோப்பிய அகராதிகளுக்கு முன்னோடியாக அமைந்த வேதாகம அருஞ்சொல்லகராதியான 1226 ஆண்டளவில் தொகுக்கப்பட்ட Catholicon முக்கியமானது.

வெனிசில் Nicolas Jenson 1462 இல் தட்டச்சு எழுத்துக்கலையை அறிமுகப்படுத்திப் பல நூல்களை அச்சுவாகனம் ஏற்றிய பெருமைக்கு உரித்தானவர். இவரைப் போன்று பலர் இங்கிலாந்து, பாரிஸ், வெனிஸ், ஃப்ராங்ஃபோர்ட், ஜெனிவா போன்ற ஐரோப்பிய நகரங்களில் அச்சுக் கூடங்களை அமைத்துத் தத்தம் மொழி அகராதி வடிவங்களை அச்சுக்கோர்த்து வெளிக்கொணர்ந்தனர்.

ஐரோப்பிய அகராதியியல் வளர்ச்சிக்கு அடித்தளமாக ஐரோப்பியப் பண்பாட்டுப் பின்புலம் அமைந்திருந்தது. ஐரோப்பிய நாடுகளிலும் பண்பாடுகளிலும் கிரேக்க,இலத்தீன் சொற்பொருளியல் முறை எழுத்து மூலங்களுடன் மறைமுகமான தொடர்புகள் கொண்டிருந்தன.

மத்திய காலப்பகுதியில் இலத்தீனியப் பண்பாட்டு மேலாட்சி ஐரோப்பாவை ஓர் அறிவியல் தேசமாகக் கட்டியெழுப்பியது. இதன் விளைவாக ஐரோப்பியத் தன்மை உடையதான அகராதியியல் தோன்றியது. இவ்வாறு தோன்றிய ஐரோப்பிய அகராதியியல் உலக அகராதியியலுக்கு முன்னோடியாக விளங்குகிறது.

## அகராதியியல் தொகுப்பில் அறிஞர் கழகங்கள்

ஐரோப்பாவில் மதகுருமார்களும் அச்சியந்திரச்சாலைக்காரர்களும் தனிப்பட்ட முறையில் தத்தம் மொழிகளில் அகராதிகளைத் தொகுத்து வந்தனர். இவ்வாறு அகராதிகள் தொடர்ந்து தொகுக்கப்பட்டு வந்த காலப் பகுதியில்,15 உறுப்பினர்கள் கொண்ட Accademia florentina-/ புளோறென்டின் அகாடமி எனும் அறிஞர் கழகம் 1612 இல்Vocabolario degli Accademici della Crusca குறுஸ்கா வொக்காபொலாறியோ என்ற இத்தாலிய அகராதியைத் தொகுத்து வெளியிட்டது.

ஐரோப்பிய பொது நோக்கீட்டு அகராதியாக ஏற்றுக்கொள்ளப்பட்ட இவ்வகராதி பிரெஞ்சு, ஆங்கிலம், இஸ்பானியம், ஜேர்மன் மொழி அகராதித் தொகுப்புகளுக்கு முன்னோடியாக அமைந்தது.

இந்த அகராதியையும் அறிஞர் குழு கொண்ட கழக அமைப்பையும் முன் மாதிரியாகக் கொண்டு பிரெஞ்சு அகராதி தொகுப்பதற்காக Académie française அகாதமி ஃப்ரான்ஸேய்ஸ் என்ற கழகம் பதின்மூன்றாம் லூயிஸ் மன்னர் ஆதரவுடன் 1535இல் பாரிசில் நிறுவப்பட்டது. இதில்40 அறிஞர்கள் உறுப்பினர்கள். இக்கழகம் Le dictionnaire de l‘ Académie française பிரெஞ்சு அகாதமியின் அகராதி எனும் முதல் அகராதியை 1694இல் வெளியிட்டது.

இவ்வகராதி வெளிவருமுன்னராக இக்கழகத்தில் அகராதி உறுப்பினர்களாக இருந்த றிஷ்லே dictionnaire françoisஅகராதியை 1680இலும், ஃபுறெத்தியர் dictionnaire universal அகராதியை 1690 இலும் பிரான்சுக்கு

வெளியே வெளியிட்டனர்.

பிரெஞ்சு கழகம் அகராதித் தொகுப்புக்கு சவால் விடுவது போல் சாமுவேல் ஜோன்சன் 1755 இல் Dictionary of the English Languageஆங்கில மொழியின் அகராதியை ஆறு அறிஞர்கள் துணைகொண்டு தொகுத்துஅளித்தார்.

இதேபோன்று Real Academicia Española எனும் இஸ்பானியக் கழகம் 1780 இல் Diccionario de la lengua epañolaஅகராதியை வெளியீடு செய்தது. பின்னர் ஜெர்மனிய அகராதியான Deutsches Wörterbuch எனும் அகராதியை 1854இல் கிறிம் சகோதரர்கள் தொகுத்தளித்தனர்.

இன்றைய அகராதி யியல் வளர்ச்சி ஐரோப்பியக் கண்டத்து பண்டைய மொழிகளான கிரேக்கமும் இலத்தீனும் உலகின் பலமொழிகளுக்கு சொற்கள் அளித்த பெருமைக்கு உரியன மட்டுமல்லாது அகராதியியல் துறையின் தோற்றத்திற்கும் மூலம் ஆனவை. அகராதிகளை நூல் வடிவில் பார்த்து அறிவை வளர்த்த காலம் மெல்ல மெல்லக் குறைந்து வரும் காலப்பகுதியில் நாம் இப்பொழுது வாழ்கிறோம்.

கணினித் துறையில் ஏற்பட்ட முன்னேற்றத்தின் பயனாக அகராதியியல் மொழிபெயர்ப்புப்பொறி களையும்,நெருக்கு வட்டு மற்றும் மின்னணுவியல், இணையத்தள அகராதிகளையும் அளித்திருக்கின்றது.

அகராதியியல் துறையிலும் மின்னணுவியல்அகராதியியல் E –lexicography அறிமுகம் கொண்டிருக்கிறது. இதன் விளைவாக அகராதியியல் துறையின் வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் புதுநோக்கில ஆராய வேண்டிய சூழல் உருவாகியிருக்கிறது.

## முகாமையான ஐரோப்பிய அகராதியியல் மாநாடுகள்: ( காலம், நகரங்கள்)

Head of the organizing committee:

| | | காலம் | நாடு — நகரம் |
|---|---|---|---|
| 01 | 9 – 12 / 09/1983 | ஐக்கிய இராச்சியம் - Exeter | Reinhard Hartmann - University of Exeter |
| 02 | 9 – 14 / 09/1986 | சுவிட்சர்லாந்து - Zurich | Mary Snell Hornby - Universität Zürich |
| 03 | 4 – 09 / 09/1988 | ஹங்கேரி - Budapest | Magay Tamás - Karoli Gaspar Refor.. |
| 04 | 28ஆக.–01 / 09/1990 | ஸ்பெய்ன் - Malaga | Manuel Alvar - Universidad de Malaga |
| 05 | 4 – 09 / 08/1992 | ஃபின்லாந்து - Tampere | Manuel Alvar - Krista Varantola |
| 06 | 30/08 – 03/09 1994 | நெதெர்லாந்து - Amsterdam | Willy - Vrije Universiteit Amsterdam |
| 07 | 13-18 /08 1996 | சுவீடன் - Goteborg | Gellerstam -Gotebrgs Universitet |
| 08 | 4 – 08 / 08/1998 | பெல்ஜியம் - Liège | Thierry Fontenelle - University de Liège |
| 09 | 8 – 12 / 08/2000 | ஜேர்மனி - Stuttgart | Ulrich Heid - Universität Stuttgart |
| 10 | 13 – 17 / 08/2002 | டென்மார்க் - Kobenhavn | Anna Brasch- Københavns Universitet |
| 11 | 06.–10 / 07/2004 | பிரான்சு - Lorient | Geoffrey Williams -Université de Bretagne Sud |
| 12 | 06.–09 / 09/2006 | இத்தாலி - Torino | Carla Marello - Università degli Studi di Torino |
| 13 | 15.–19 / 07/2008 | ஸ்பெய்ன் - Barcelona | Janet DeCesris -Universitat Pompeu Fabra |
| 14 | 15.–19 / 07/2010 | நெதெர்லாந்து - Leeuwarden | Anne Dykstra -Fryska Akademy |
| 15 | 07 – 11 / 08/2012 | நோர்வே - Oslo | Ruth E Vatvedt Fjeld - Universitet i Oslo |
| 16 | 15.–19 / 07/2014 | இத்தாலி - Bolzano | Andrea Abel-Inst. Communication - Eurac |
| 17 | 06.– 10 / 09/2016 | ஜோர்சியா- Tbilisi | Tinatin Mar – Tbilisi State University |
| 18 | 17.– 21 / 07/2018 | ஸ்லோவெனியா - Ljubljana | Simon Krek - University of Ljubljana |

ஐரோப்பியத் தமிழ் அகராதியியல் மாநாடு :

| | | | |
|---|---|---|---|
| 28, 29/09/2019 | பிரான்சு - Paris | தமிழ் அகராதியியல் பரிணாமம் மற்றும் பரிமாணம் | ச.சச்சிதானந்தம் .கோ.விசயராகவன். பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம் -- உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் . பேராதனைப் பல்கலைக்கழகம். ... |

வருங்கால மாநாடுகள்

| | | | |
|---|---|---|---|
| 19 | 07.– 09 / 09/2021 | கிரீஸ்- Alexandroupoli | Zoe Gaviriilidou – Democritus University of Thrace |
| 20 | 12.– 16 / 07/2022 | ஜேர்மனி - Manneheim | Annette Klosa - Leibniz – Institute for the German Language |

# சொல்லாய்வும் சொல்லாக்கமும்

க.முத்துவிக்னேஷ்
ஒருங்கிணைப்பாளர், நொதுமி தமிழாய்வு நடுவம்

சொல் என்பது ஒரு பொருளை உணர்த்துவது மட்டுமன்று. மொழி, வரலாறு, பண்பாடு என மூன்றையும் உணர்த்துவது. சான்றுக்கு, பாவாணர் ஒன்றைக் குறிப்பிடுகிறார். படை மறவர்க்கு நெல்லையும் உப்பையும் கூலியாகக் கொடுக்கும் வழக்கம் இருந்தது .

இது மக்களின் பண்பாட்டுக்கூறு. இதைச் சம்பளம் என்ற சொல் உணர்த்துகிறது. இந்தச் சம்பளம் என்ற சொல்லின் வரலாறு குறித்துச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி பின்வருமாறு விளக்குகிறது.

“பழங்காலத்தில் சம்பளம் கூலமும் உப்புமாகக் கொடுக்கப்பட்டது. கூலம் தானியம். (கூலமாகக் கொடுக்கப்படுவது கூலி.) கூலத்திற் சிறந்தது நெல்லாதலின் நெல் வகையிற் சிறந்த சம்பாவின் பெயராலும், உப்பின் பெயராலும் சம்பளம் என்னும் பெயர் உண்டாயிற்று. சம்பும் அளமும் சேர்ந்தது சம்பளம். சம்பு என்பது சிறந்த நெல் வகைக்கும் சிறந்த கோரை வகைக்கும் பொதுப்பெயர்.



ஓங்கி வளர்ந்த சம்பா நெற்பயிரும் சம்பங்கோரையும் ஒத்த தோற்றமுடையனவா யிருத்தல் காண்க. நெல்லைக் குறிக்கும் சம்பு என்னும் பெயர் இன்று சம்பா என வழங்குகிறது. வகரவீற்றுச் சொற்கள் ஆகாரவீறு பெறுவது இயல்பே. எ.டு. கும்பு > கும்பா, குண்டு > குண்டா.

அளம் என்பது உப்பு. உப்பு விளைவிப்போர் அளவர் எனப்படுதல் காண்க. அளம் என்னும் சொல் தன் பொருளிழந்து ஈறாக மாறியபின் உப்பைக் குறிக்க, உம்பளம் என்றொரு சொல் வேண்டியதாயிற்று. உப்பைச் சம்பளப் பகுதியாகக் கொடுக்கும் வழக்கம் நின்றுவிடவே, உம்பளம் என்னும் சொல்லும், அப்பொருளில் வழக்கு வீழ்ந்தது. மானியமாகக் கொடுக்கும் நிலத்திற்குப் பெயராக ஆளப்பட்டது. உம்பு = உப்பு.

“உப்புக்கு உழைத்தல்”

“உப்பைத் தின்னுதல்” என்னும் வழக்குகளையும்

“உப்பிட்டவரை உள்ளளவும் நினை” என்னும் பழமொழியையும் நோக்குக”

“salary (soldier’s pay, which was given partly in salt) wages” (Einglish work-book, p.90) (சொ.க.121)” (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, மூன்றாம் மடலம் முதல்பாகம், ப.145)

ஒரு மொழியினரிடமிருந்தே பிற மொழியினருக்கு உணவில் உப்புச் சேர்க்கும் வழக்கம் பரவியுள்ளது என்கிறார் பாவாணர். எனவே ஒரு சொல்லை ஆய்வுக்கு உட்படுத்தும் போதும் புதிதாக உருவாக்கும் போதும் இதையும் நினைவில் கொள்ள வேண்டும்.

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்று தொல்காப்பியர் கூறுகிறார். "எல்லா வேரும் ஏரணம் உடையவையே" என்று பாவாணர் கூறுகிறார். இந்த இரண்டு கூற்றையும் தெளிவாகப் புரிந்துகொள்ளும் போது சொல்லாய்வும் சொல்லாக்கமும் சிறப்பாகிறது. எல்லா வேரும் ஏரணம் உடையவையே என்ற கூற்றுக்குப் பாவாணரின் வாழ்வில் நிகழ்ந்த ஒரு நிகழ்வே விடையாகிறது.

பாவாணரிடம் அவர் நண்பர் ஒருவர்,“எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்றால் மரம் என்ற சொல்லின் பொருள் என்ன?” என்றார். பாவாணர் அருகில் இருந்த திண்ணையில் அமரச்சொல்லி தன் பணிகளைத் தொடர்ந்தார். சிறிது நேரம் கழித்து,“அருகில் வா” என்றார். அப்பொழுது அவரின் நண்பர் "கால் மரத்துப் போச்சு" என்றார். இப்பொழுது புரிகிறதா உயிர் இருக்கும்; ஆனால் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு நகர முடியாது.” என்றாராம். இதன் மூலம் "எல்லா வேரும் ஏரணம் உடையவையே" என்ற பாவாணரின் கூற்று உறுதியாகிறது. மரம் என்ற சொல்லுக்கான வேர்ச்சொல்லைப் பாவாணர் பின்வருமாறு விளக்கியுள்ளார்.

“மரம் உணர்ச்சியற்றது. கால் உணர்ச்சியற்றால் மரத்துப் போய்விட்டது என்பது வழக்கம். உணர்ச்சியற்றவனை மரம் போலிருக்கிறான் என்பர். மதமதப்பு = உணர்ச்சியின்மை. மதத்தல் = மரத்தல். மதம் > மரம்.” (பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும். பக்.23)

ஒரு சொல்லை ஆய்வு செய்யும் போது அதன் வேரை மட்டும் பார்க்காமல் வேரின் பொருள், ஏரணம், சொல் உணர்த்தும் பொருள், அவை உருவாக அடிப்படையான காரணம் என அனைத்தையும் முழுமையாகப் பார்க்க வேண்டும்.

ஒரு சொல்லின் சொற்பிறப்பைப் பார்க்கும் போது சொல்லின் முதனிலை, ஈறு, இடைநிலை, சாரியை, புணர்ச்சி, திரிபு ஆகிய அறுவகை அடிப்படை இலக்கண அறிவுடைமைகளைக் கொண்டு ஆராய வேண்டும்.

ஒரு சொல்லை உருவாக்கும் போது அச்சொல்லை ஏன் அப்படி உருவாக்கினோம். அதற்கான காரணம் என்ன? என்பதையும், கூட்டுச்சொல் எனில் அவை எப்படிப் புணர்ந்தன என்பதையும் அவற்றிற்கான புணர்ச்சி விதிகளையும் ஆவணப்படுத்தல் வேண்டும்.

அது ஒரு சொல்லை எளிமையாகப் புரிந்து கொள்ளவும் எதிர்காலங்களில் புரிதலுடன் அந்தச் சொல்லை ஆராயவும் பயனுள்ளதாக இருக்கும். சொல் சார்ந்த ஆய்வுகளையும் சொல்லாக்க விழிப்புணர்வையும் பள்ளி, கல்லூரி மாணவர்களிடம் கொண்டு சேர்த்தல் சொல் சார்ந்தஆய்வுகளை மேம்படுத்தும்.

# இடும்பையா? இடும் பையா?

## (நான்காம் குறளை முன்வைத்து)

### தொடக்கவுரை:

உலகப் பொதுமறையாக ஒளிரும் வான்புகழ் வள்ளுவம் தமிழினத்தின் பண்பாட்டுக்கும், மொழியாளுமைமிக்க இலக்கியப் படைப்பாற்றலுக்கும் தலையாய சான்றாகத் திகழ்கிறது. மதம் விலக்கி மனம் துலக்கும் திருக்குறள்தான், சமயம் சாரா நூல்களுள் அயன்மொழிகளில் அதிகம் மொழிபெயர்க்கப்பட்ட அருமைக்குரியது.

இத்தகு சிறப்பு வாய்ந்த திருக்குறள்,"நவில்தொறும் நூல்நயம்" நல்கி,"தொட்டனைத்தூறும் மணற்கேணி" போல், ஊன்றிக் கற்பாரின் உளப்பார்வைக்கேற்பப் புதுப்புதுக் கருத்துகளைச் சுரக்கிறது. அதனால்தான் தருமர், மணக்குடவர் உள்ளிட்ட பதின்மர் தொடங்கி இன்றுவரை பலரும் குறளுக்கு வரையும் உரைகள் ஓய்வதில்லை.

புதிய நோக்கும், புதுச் சிந்தனையுமே புதுப்புது உரைகள் எழக் காரணங்களாகின்றன. அதனடிப்படையில், நான்காம் குறளில் இடம்பெற்றுள்ள 'இடும்பை'என்ற சொல்லுக்கு, இதுவரையில் உரையாசிரியர்கள் கூறியுள்ள பொருளிலிருந்து இம்மியளவு விலகி இன்னொரு பொருளைச் சிந்திக்கும் கருத்தை அறிஞருலகில் முன்வைப்பதே இவ்வாய்வுக்கட்டுரையின் நோக்கமாகும்.

### தரவுகள்

மணக்குடவர்,பரிதியார், பரிப்பெருமாள், காளிங்கர், பரிமேலழகர், மல்லர், பெயரறியாத பழைய உரையாசிரியர்கள் இருவர், காரிரத்தினக்கவிராயர், கவிராசபண்டிதர், வீரமாமுனிவர், நாமக்கல் இராமலிங்கம்பிள்ளை, புலவர் குழந்தை, வை.மு.கோபாலகிருட்டிணமாச்சாரியார், திரு.வி.கலியாண சுந்தரனார்,நாகை சொ.தண்டபாணிபிள்ளை, மு.வரதராசனார், சுகாத்தியார், கா.சுப்பிரமணியபிள்ளை, ஞா.தேவநேயப் பாவாணர், பெருஞ்சித்திரனார் ஆகியோர் இயற்றிய திருக்குறள் உரைகளைத் துணையாகக் கொண்டே இக்கட்டுரை எழுதப்பெறுகிறது.

### இடும்பை – பொருண்மை

'இடும்பை'என்ற சொல்லுக்குச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி,'துன்பம்','தீமை','நோய்', 'ஏழ்மை','அச்சம்','ஏதம்','எலி'என்று ஏழு பொருள்களை எடுத்துரைக்கின்றது.மேலும் 'இடும்பை'என்ற சொல் 'இடு'எனும் வேர்ச்சொல்லிலிருந்து வந்தது என்பதனை,

**"இடு = குத்துதல், துன்புறுத்துதல்**
**இடும்பு = துன்பம்**
**(இடு > இடும்பு > இடும்பை)**" என்று விளக்கியுள்ளது.

( முதல் மடலம் இரண்டாம் பாகம். ப.264)

இனி, நான்காம் குறளிலுள்ள 'இடும்பை'க்கு என்ன பொருள் என்றறியுமுன், வேறுசில குறட்பாக்களில் இடம்பெற்றுள்ள 'இடும்பை' என்ற சொல்லுக்கான பொருள்களைத் தெளியவேண்டிய தேவையுள்ளது.

### இடும்பை குறளும் பொருளும்

**திருக்குறளில் 'இடும்பை' என்ற சொல் மொத்தம் 16 இடங்களில் பயின்றுவந்துள்ளது. அக்குறள்கள் பின்வருமாறு;**

| | |
|---|---|
| யாண்டும் இடும்பை இல | 4 |
| தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும் | 138 |
| பற்றி விடாஅ இடும்பைகள் | 347 |
| தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை தீரா இடும்பை தரும் | 508 |
| தேரான் தெளிவும் தெளிந்தான் கண் ஐயுறவும் தீரா இடும்பை தரும் | 510 |
| வெள்ளத் தனைய இடும்பை | 622 |
| இடும்பைக் கிடும்பை படுப்பர் இடும்பைக்கு இடும்பை படாஅ தவர் | 623 |
| இலக்கம் உடம்பிடும்பைக் கென்று | 627 |
| இடும்பை இயல்பென்பான் துன்பம் உறுதல் | 628 |
| பெரியாரைப் பேணா தொழுகின் பெரியாரால் பேரா இடும்பை தரும் | 892 |
| இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ | 1029 |
| நல்குரவு என்னும் இடும்பை | 1045 |
| கரப்பிடும்பை இல்லாரைக் காணின் நிரப்பிடும்பை எல்லாம் ஒருங்கு கெடும் | 1056 |
| நிரப்பிடும்பை தானேயும் சாலுங் கரி | 1060 |
| இன்மை இடும்பை இரந்துதீர் வாமென்னும் | 1063 |
| அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு | 1295 |

இவற்றில் 1056ஆவது குறளில் 'கரப்பிடும்பை' என்ற சொல்லிலுள்ள 'இடும்பை' என்பதற்கு மட்டும் 'நோய்' என்ற பொருள் கூறப்பட்டுள்ளது. மற்ற அனைத்து இடங்களிலும் 'துன்பம்' என்ற பொருளே இயற்றப்பட்டுள்ளது.

### 'இடும்பை' நான்காம் குறளும் நவிலும் பொருளும்

**"வேண்டுதல் வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்கு**
**யாண்டும் இடும்பை யில"**

என்ற நான்காம் குறளில் இடம்பெற்றுள்ள 'இடும்பை' என்ற சொல்லுக்கு உரையாசிரியர்கள் கூறும் பொருள் விளக்கம் பின்வருமாறு அமைந்துள்ளது;

**துன்பம்:** பரிதியார், பழைய உரையாசிரியர்1
நாமக்கல் இராமலிங்கம்பிள்ளை,
புலவர் குழந்தை,
மு.வரதராசனார்,
தேவநேயப் பாவாணர்,

காசுப்பிரமணியபிள்ளை,
திரு.வி.கலியாணசுந்தரனார்,
சொ.தண்டபாணிபிள்ளை

**துயரம்:** காளிங்கனார்

**பிறவித்துன்பங்கள்:** பரிமேலழகர், பழைய உரையாசிரியர் 2

**பிறவியாகிற துக்கம்:** கவிராசபண்டிதர்

**இவ்வுலகத் தீமை:** வீரமாமுனிவர்

**அகந்தையால் வரும் துன்பம்:** சுகாத்தியர்

**அலைக்கழிக்கும் அல்லல் அல்லது ஊழ்வழி ஏற்படும் துன்பம் :** கா.அப்பாத்துரையார்

## இடும்பையா? இடும் பையா?

இதுவரையில் கூறியவற்றிலிருந்து நான்காம் குறளில் 'இடும்பை' என்ற சொல்லுக்குத் 'துன்பம்' என்ற பொருளையே (பிறவித்துன்பம், பிறவியாகிய துன்பம், பிறவிக்கண் ஆகின்ற துன்பம்) கூறியுள்ளனர் என்பது தெளிவாகிறது. இந்நிலையில் 'இடும்பை' என்ற சொல்லை 'இடும் பை' எனப் பிரித்து,'உயிரை இட்டு நிரப்பும் பை'அதவாது'கருப்பை' என்று பொருள் கொள்ளவும் இடமுள்ளது. எவ்வாறெனில், இறைவனின் திருவடியே அடைக்கலம் என்று அடைந்தவர்க்கு, மீண்டுமொருமுறை கருப்பையில் பிறந்துழலும் துன்பம் இல்லை எனப் பொருள்கொள்ளலாம்.

## இடும் பை ஏற்புடையதா?

'இடும்பை' என்ற சொல்லை 'இடும் பை' எனப் பிரித்துப் பொருள் கொள்வது ஏற்புடையதா? என்று ஐயம்கொள்வார்க்கு எழும் அடிப்படை வினாக்களும் அவற்றிற்கான விடைகளும் கீழே நிரல்படுத்தப்பட்டுள்ளன.

**வினா 1 :** குறளிலேயே ஏன் இடும் பை எனச் சீர்பிரித்து எழுதவில்லை?

**விடை :** இடும் பை எனச் சீர் பிரித்து எழுதினால் இடையில் ஓரசைச்சீர் (நிரையசை) வரும். அதனால் தளை தட்டும்; பிழை கிட்டும்.

வேண் டுதல் வேண் டா மை இலா னடி சேர்ந் தார்க் கு
யாண் டும் இடும் பை இல
வேண் டுதல் வேண் டா மை இலா னடி சேர்ந் தார்க் கு
யாண் டும் இடும் பை இல

**வினா 2 :** இடும் பை (கருப்பை) இல்லை என்பது அனைத்துத் துன்பங்களும் இல்லை என்பதைக் குறிக்குமா?

**விடை:** "இலை போட்டாச்சு" என்றாலே அதில் பரிமாறப்பட்ட அனைத்துப் பண்டங்களும் அடக்கம்தானே. பிறவியே இல்லையென்றானபின் பிற துன்பங்களைப் பற்றிப் பேசுவானேன்?

**வினா 3 :** பிறவித்துன்பம் இல்லை என்பதற்கும் 'கருப்பை' இல்லை என்பதற்கும் எந்தளவு வேறுபாடுஉள்ளது?

**விடை :** கண்ணில்லை என்பதற்கும் காட்சியில்லை என்பதற்குமான நுண்ணிய வேறுபாடே உள்ளது. உடலே இல்லையெனில் உடற்றுன்பம் ஏது?

**வினா 4 :** நான்காம் குறளில் மட்டும்தான் 'இடும்பை'க்கு இந்தப் பொருள் பொருந்துமா?

**விடை :** இறைவாழ்த்துப் பகுதியில் வள்ளுவப் பேராசான், "அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால் பிறவாழி நீந்தல் அரிது"(8) "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேரா தார்" (10) என்று கடலோடு ஒப்பிட்டுப் பிறவி பற்றி பேசியுள்ளதால், நான்காம் குறளில் 'இடும்பை' என்பதற்குக் 'கருப்பை' என்று பொருள் கொள்ள இடமுள்ளது. மேலும், "நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும்" (138) என்ற குறளைக் கொண்முடிபு (சித்தாந்தம்) நோக்கில் பார்த்தால்,'இடும்பை'க்குக் 'கருப்பை' என்று பொருள்சொல்லலாம். அதேபோல், "பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப் பற்றி விடா அதவர்க்கு" (347) என்ற குறளுக்கும் இப்பொருள் பொருந்தும். ஏனைய குறள்களில் உள்ள 'இடும்பை' இப்பொருள்கொள்ளாது.

**வினா 5 :** 'பிறப்பறுத்தல்' கொள்கை வள்ளுவர்க்கு உடன்பாடா?

**விடை :** "பிறப்பறுக்கல் உற்றார்க்(கு) உடம்பும் மிகை (345) "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்" (349) "ஒருதலையா பேர்த்துள்ள வேண்டா பிறப்பு" (357) "பிறப்பென்னும் பேதைமை நீங்க" (358) உள்ளிட்ட குறட்பாக்களே வள்ளுவப் பெருந்தகைக்கும் 'பிறப்பறுத்தல்' கொள்கையில் உடன்பாடு என்பதற்குச் சான்றுகளாகும். அறம் பாடிய வள்ளுவன் மட்டுமல்ல, ஆண்டவனின் அருளைப் பாடிய அடியார்களும் பத்தி இலக்கியங்களில் 'பிறப்பறுத்தலையே' பெரிதும் வேண்டிப்பாடியுள்ளனர். "பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும்" என்று பாடிய காரைக்கால் அம்மையார், தான் இயற்றிய திருவிரட்டை மணிமாலையில் இறைவனை,"பிறவாமை காக்கும் பிரான்"(தி.ம.மா.25)எனச் சொல்லிப் புகழ்கிறார். நாவுக்கரசரும் இறைவனை,"பிறப்பறுத்து ஆளவல்லான்" (4:86:11) என்றே போற்றுகின்றார். "கறவா மடநாகுதன் கன்றுள்ளி னாற்போல்" எனத் தொடங்கும் பெரியதிருமொழி பாசுரத்தில்,"பிறவாமை யெனைப்பணி யெந்தை பிரானே"(7:1:1) என்றே திருமங்கையாழ்வாரும்; ஆண்டவனிடம் வேண்டி உருகுகிறார். பத்தியில் இருபெரும் அடிப்படை வேண்டுதல்களே அடைக்கலமும் பிறப்பறுத்தலுமே எனலாம். அதனால்தான் அடியார்கள் இறைவனுக்கே 'பிறவா யாக்கைப் பெரியயோன்' எனப் பெயரிட்டு மகிழ்ந்தனர். மேற்சொன்ன சான்றுகள்வழி வள்ளுவருக்கும் 'பிறப்பறுத்தல்' கொள்கை ஏற்புடைத்தே என்பதை அறியலாம்.

## நிறைவுரை

ஓர் ஆய்வின் முடிபுகள் மற்றொரு ஆய்வால் மறுக்கப்படலாம். முரண்கள் முளைக்கும் இடம்தான் புதிய சிந்தனைக்கான களமாக மாறுகிறது. எனவே நான்காம் குறளில் உள்ள 'இடும்பை' என்பதற்குக் 'கருப்பை' என்று பொருள் கொள்ளவும் இடமுள்ளது என்ற கருத்து அறிஞர்கள் எண்ணத்துக்கு எடுத்துவைக்கப்பட்டுள்ளது. இதை ஏற்பதும் மறுப்பதும் ஆய்வுலகின்பாற்பட்டது.

**பார்வை நூல்கள்**


1. திருக்குறள் உரைக்களஞ்சியம் (அறத்துப்பால்பாயிரவியல்) ச.தண்டபாணி தேசிகர்
2. திருக்குறள் தமிழ் மரபுரை மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர்
3. திருக்குறள் மெய்ப்பொருளுரை பாவலரேறு பெருஞ்சித்திரனார்
4. முப்பால் ஒளி இறை.பொற்கொடி
5. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி, முதன்மடலம் இரண்டாம் பாகம்



**முனைவர் வே.கார்த்திக்,**
தொகுப்பாளர், அகரமுதலி இயக்ககம்



# எள்

‘எள்நிறைந்த நெய்யொத்து நின்றானை நீலமிடற்றானை’. எள் மிகச்சிறியது; சிவனோ மிகப்பெரியவன். எள்ளைச் சிவனுக்கு உவமையாகப் பாடியுள்ளார் ஐயனாரிதனார். எள்ளினுள் எண்ணெயானது எல்லா இடத்தும் நீக்கமற நிறைந்து நிற்கும். அதைப் போன்று அனைத்துப் பொருள்களிலும் இரண்டறக் கலந்து நிற்பவன் சிவபெருமான், என்கிறது புறப்பொருள் வெண்பாமாலை.

எள், அதிலிருந்து கிடைக்கும் எண்ணெய் இரண்டையும் இலக்கியத்திற்கும் இலக்கணத்திற்கும் உவமையாகக் கையாண்டுள்ளார் தொல்காப்பியர்.

‘எள்ளின் றாகில் எண்ணெய் இன்றே எள்ளினின்று எண்ணெய் எடுப்பது போல் இலக்கியத்தி னின்று எடுக்கப்படும் இலக்கணம்’.

எள், இலக்கிய, இலக்கணங்களில் மட்டும் அல்ல, வாழ்விலும் தவிர்க்க முடியாத ஒரு வித்து. தெள்ளிய ஆலின் சிறுபழத்து ஒரு விதைக்கு, சிறுமீனின் சினையை உவமையாகக் காட்டியிருப்பார் ஔவையார். தமிழ் இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்ட மிகச்சிறிய வித்து ஆலின் விதைதான். அதற்கு அடுத்தது, எள்.

**'எட்பகவு அன்ன சிறுமைத்தே யாயினும்**
**உட்பகை உள்ளதாம் கேடு'**

என்கிறது வள்ளுவம். எள் சிறியது. அதை இரண்டாகப் பகுத்தால் எத்தனை சிறியது, அந்தளவு சிறிய உட்பகையும் உறவைக் கெடுக்குமாம்.

எள், எண், எட் என்பதற்கு 'மிகச் சிறிய' என்று பொருள். எள், நீட்டல் அளவைக்கான குறியீடு. எள்ளைக் கொண்டே எள்ளினும் சிறிய பொருட்களை அளந்திருக்கிறார்கள். ஒரு மன்னன் ஓர் இலை வணிகப் பெண்ணைச் சந்தித்திருக்கிறான். அவளது இலை அறிவைச் சோதிக்கும் பொருட்டு, புதிர் விடுத்திருக்கிறான்.

**‘எள்ளிலே பிறந்து எள்ளிலே வளர்ந்த இலை வணிகப் பெண்ணே,**
**எள்ளினும் சிறிய இலை என்ன இலை?’.**

அதற்கு மறுமொழியாக அவளொரு புதிரை விடுத்திருக்கிறாள்.

**‘பூவிலே பிறந்து பூவிலே வாழும் பூவுலகு ராசாவே,**
**பூவிலே மூவண்ணப்பூ பூக்கும் செடி எதுவோ,**
**அதுவே உன் கேள்விக்கு விடை’**

என்றாள். வேடதழைச் செடி. இதன் இலை எள்ளைப் போன்றும் எள்ளினும் சிறியதாக இருக்கும்.

எள் பல சொற்களுக்கு வேர்ச்சொல்லாக இருக்கிறது. எள்ள, எள்ளறு, எள்ளப்படு, எள்ளல், எள்ளலன், எள்ளலான், எள்ளார், எள்ளி, எள்ளிய, எள்ளினும், எள்ளீயும், எள்ளு, எள்ளுக, எள்ளுதல், எள்ளுநர், எள்ளுபு, எள்ளும், எள்ளுமார், எள்ளுவாய், எள்ளுற்று ஆகிய சொற்கள் எள்ளை வேர்ச்சொல்லாகக் கொண்டவை.

நகைப்பில் நான்கு வகை உண்டு. எள்ளல், பேதைமை, இளமை, மடன். இதில், வள்ளுவர்,

உருவு கண்டு எள்ளாமை வேண்டும், என்கிறார். எள் மிகச் சிறியது. அதன் உருவத்தைக் கொண்டு நகையாடிவிடக் கூடாது. எள் நைந்து கிடக்கும் அதன் எண்ணெய் நகையாடியவரையும் வழுக்கி விழச் செய்துவிடக்கூடியது.



“இளைத்தவனுக்கு எள்ளு, கொழுத்த வனுக்குக் கொள்ளு” என்பது பழமொழி. இளைத்தவன் எள்ளைத் தின்ன வேண்டும், எள்ளைத் தின்று மலம் கட்டிக்கொண்டால், அதே எள்ளின் நெய் மலத்தை உடைக்கும் மருந்து.

எள்ளி (நகைத்தல், அவமானப்படுத்தல்) / ஏழைக்கேற்ற எள்ளுருண்டை ( மலிவு) / எள் போட இடம் இல்லை ( இட நெருக்கடி) / எள்ளுப் போட்டால் எண்ணெய் ஆகிவிடும் ( கூட்ட நெரிசல்) / எள் என்றால் எண்ணெய்யாக இருக்கிறவன் ( அதிவேகம்) எள் ஏன் காயுது, எண்ணெய்க்கு; எலிப் புழுக்கை ஏன் காயுது? கூடக் கிடந்த குற்றத்துக்கு / எள்ளில் நெல் கிடந்தால் நெல்லே பதர். / எள் போட்டால் எள் விழாது ( கூட்ட நெரிசல்) / எள் விதைத்த காட்டில் கொள் முளையாது / எள் விதைத்தால் துவரை விளையுமா? / எள்ளுக்காய் முள்ளுத் தெறிப்பது போல (மந்தணம் – இரகசியம் ) இவை யாவும் எள்ளுடன் தொடர்புடைய சொற்றொடர்கள்.

சூடாமணி நிகண்டு எள், நூ, எண் ஆகிய மூன்று பெயர்களை எள்ளுக்குத் தருகிறது. சங்ககாலத்தில், எள் கைம்பெண் வாழ்க்கையுடன் தொடர்புகொண்ட வித்தாக இருந்திருக்கிறது. கணவனை இழந்த பெண்களுக்கு எள் துவையலும் வேளைக்கீரையும் உணவுப் பொருளாக இருந்திருக்கிறது.

வெள் எள் சாந்தொடு புளிப்பெய்து அட்ட வேளை வெந்தை ( புறநானூறு). ஒலையூர் தந்த பூதப் பாண்டியன் இறந்தவுடன், அவனுடன் சேர்ந்து உடன்கட்டை ஏற முயல்கிறாள் பெருங்கோப்பெண்டு. அவளைத் தடுத்து நிறுத்தும் மக்களைப் பார்த்துச் சொல்கிறாள் அவள், 'பல்சான்றீரே ! என்னை எள்ளுத் துவையலும் வேளைக்கீரையும் சாப்பிடும் பெண் என்று நினத்துவிட்டீர்களோ?'.

சிதட்டுக் காய் என்றொன்று எள்ளில் உண்டு. அதிக மழை பெய்தால், காயாக இருக்கும் எள் பதனழிந்து, உள்ளீடின்றிப் போகும். உள்ளீடில்லாத காய்களே ‘சிதட்டுக் காய்’. இக்காயைப் பாடும் குறுந்தொகை பாடல் ஒன்றுண்டு.

**‘பழமழை பொழிந்தெனப் பதன் அழிந்து உருகிய**
**சிதட்டுக்காய் எண்ணின் சில்பெயற் கடைநாள்’.**

எள்ளுக்கு, கௌவை என்றும் கருங்காய் என்றும் பெயருண்டு.

**‘கௌவை போகிய கருங்காய் பிடிஏழ்**
**நெய்கொள ஒழுகின, பல்கவர் ஈர் எண்’.**

எள் அறுவடை செய்து, அதைத் தலைகீழாகக் கவிழ்த்து வைப்பர். வெயிலில் அதன்காய் வெடித்துச் சிதறும். அதைக்கூட்டி ஒன்று சேர்த்ததன் பிறகு, மழை பெய்தால், வாசல் (சோப்பு) வழலை நுரையைப் போலப் பொங்குவதுடன் வழுக்கவும் செய்யும். அம்மண்ணை அள்ளி, தலையில் தேய்த்துக் குளிப்பர்.

ஆற்றுக் கரையோரங்களில் இன்றும் உவர்மண் கிடைப்பதுண்டு. அதை சவுக்கார மண்,உப்பு மண் என்று சொல்வர்.

வழலை (சோப்பு) வருகைக்கு முன் குளிக்க, ஆடைகள் துவைக்க உவர்மண்தான். அந்த மண் அழுக்கைப் போக்கும். ஆனால் நுரை தராது. அதற்காக, அம்மண்ணுடன் எள்ளின் இலையைச் சேர்த்து,ஊறவைத்து,கரைத்து,குளிக்கையில்நுரையுடன் சேர்த்து அழுக்கையும் போக்கும். வழலை (சோப்பு, சவுக்காரம்) உருவாக்கத்திற்கு முன்னோடியானது எள்.

சனி நீராடு என்பதற்குக் கிழமைக்கு (வாரத்திற்கு) ஒரு நாள் எண்ணெய்த் தேய்த்துக்குளி என்பதாகப் பொருள் கொள்ளப்படுகிறது.

தொடக்கத்தில் எள்நெய் உடையோர் எண்ணெய்த் தேய்த்தும், இல்லாதோர் எள்ளின் இலையைத் தேய்த்தும் குளித்திருக்கிறார்கள். எண்ணெய் என்கிற சொல் எள்ளிலிருந்து பிறந்ததே.

சங்கப்புலவர்களைத் தொடர்ந்து எள், கம்பரையும் விட்டுவைக்கவில்லை. கம்பராமாயணத்தில் இராமனின் அம்புக்கு இலக்காகி இராவணன் இறந்துகிடக்கிறான். அவரது மனைவி மண்டோதரி கணவனின் உடம்பைப் பார்க்கிறாள். எள் விழ இடமில்லாத அளவிற்கு உடம்பெங்கும் இராமனின் அம்புத்துளைகள்.

**“வெள் எருக்கஞ் சடை முடியான் வெற்பு எடுத்த**
**திரு மேனி, மேலும் கீழும்**
**எள் இருக்கும் இடன் இன்றி, உயிர் இருக்கும்**
**இடன் நாடி, இழைத்தவாறோ?“**

எள் எள்ளும் நெல்லும் கலந்த தவசத்தில் எள்ளுக்குள் நெல் என்பது பதர். போர்க்களத்தில் எள் கிடந்தால், போர் புரிவதைக் காட்டிலும் எள்ளைப் பொறுக்குவதே சாலச்சிறந்தது. ஏனென்றால், நெல் பசியைப் போக்குவது, எள் வறட்சியை(பஞ்சத்தை)ப் போக்க வல்லது.

**அண்டனூர் சுரா**
**( சு.இராஜமாணிக்கம்)**
பட்டதாரி ஆசிரியர், காட்டுநாவல்,
கந்தர்வகோட்டை
புதுக்கோட்டை மாவட்டம்

# திருக்கோவில்களில் தமிழ்ச் சொற்கள்

தேவஸ்தானம்–தேவகம், திருக்கோவில்

உற்சவங்கள் – திருவிழாக்கள், விழாக்கள்

நிர்வாக அதிகாரி – செயல் அலுவலர், ஆள்வினைஞர், கருமத் தலைவர்

கர்ப்பகிரகம் – கருவறை, உண்ணாழிகை

பூர்த்தி– நிறைவு

ஆலய நிர்வாகிகள் – கோவில் கருமத் தலைவர்கள்

பசலி – பயிராண்டு,

பஞ்சாங்கம் – ஐந்திறம்

பிரதோஷம் – மசண்டை

அமாவாசை– காருவா

கார்த்திகை – ஆரல், அறுமீன்

ஷஷ்டி–அறமி

வசந்தோற்சவம்– இளவேனில் விழா

ஸ்ரீவள்ளி –திருவள்ளி

ரதாரோஹணம் – தேர் ஏற்றம்

த்வஜஅவரோஹணம் – கொடி இறக்கம்

கும்பாபிஷேகம் – குடமுழுக்கு

வருஷாபிஷேகம் – ஆட்டைத் திருமுழுக்கு

அன்னாபிஷேகம்– சோற்றுத் திருமுழுக்கு

லக்ஷராச்சனை ஆரம்பம் – இலக்க வழிபாட்டுத் தொடக்கம்

சனி ப்ரதோஷம்– காரி மசண்டை

கன்னிமார் பூஜை– கன்னிமார் பூசை

மஹாபிஷேகம்– பெருமுழுக்கு

விநாயக சதுர்த்தி– மூத்த பிள்ளையார்நலமி

போதாயன மஹாளய அமாவாசை – போதாயன மூதிரைக் காருவா

கேதாரகௌரிவிரதம் – மலைமகள் நோன்பு

நவராத்திரி ஆரம்பம் – தொள்ளிரவுத் தொடக்கம்

சரஸ்வதி பூஜை– கலைமகள் பூசை, நாமகள் வழிபாடு

ஆயுத பூஜை –கருவிப் பூசை

நாக சதுர்த்தசி ஸ்நானம் – நாகநலமிக் குளிப்பு

உற்சவ த்வஜ ஆரோஹணம் – விழாக் கொடி ஏற்றம்

ரிஷப லக்னம் – விடையோரை

யுகாதி பண்டிகை – தெலுங்கு ஆண்டுப் பிறப்பு

சாதாரண வருஷ பிறப்பு – நாற்பானாலாம் ஆண்டுப் பிறப்பு

ஸ்ரீவைஷ்ணவ ஏகாதசி – திருமாலியப் பதினொரமை

சைத்ரோற்சவம் கிராமசாந்தி– மேழவிழா ஊர்ச்சமந்தி

துவஜாரோஹணம் – கொடி ஏற்றம்

சர்வ ஏகாதசி – அனைத்துப் பதினொரமை

யாத்ரிகர் – திருவழிப்போக்கர்

உபநயனம் – பூணூல் சடங்கு

பஞ்சாமிர்த அபிஷேகம்– ஐயமுதத் திருமுழுக்கு

தீர்த்த அபிஷேகம் – திருப்புனலாட்டு

பால் அபிஷேகம்– பால் முழுக்கு

சாயரட்சை – மாலைப்பூசை

நைவேத்தியம் – காணிக்கை, படைப்பு

அர்ச்சகர் – வழிபாட்டாசான்

மிதுன லக்னம் – ஆடவையோரை

சித்திரா பௌர்ணமி – மேழ மதியம், மேழ வெள்ளுவா

அக்னி நக்ஷத்திரம் ஆரம்பம் – கத்தரித் துவக்கம், எரிநாள் தொடக்கம்

சீதகும்பம் – குளிர் கும்பம், தண்குடம்

நடராஜர் அபிஷேகம்– நடவரசு திருமுழுக்கு, ஆடலரசு திருமுழுக்கு

சுவாமி தீர்த்தம்– இறைத் தூநீர்

வசந்தோற்சவம் – இளவேனில் விழா

ஆரோஹணம் – கொடியேற்றம்

ஸ்ரீ தேவசேனா– திருத்தெய்வயானை

விருச்சிக லக்னம் – நளியோரை

சூரசம்ஹார உற்சவக் காப்புக்கட்டு– சூர்தடி விழா காப்புக்கட்டு

ஸ்கந்த ஷஷ்டி– கந்தர் அறமி

திருக்கல்யாணம்–திருமணம்

திருக்கார்த்திகைஉற்சவம் – திரு ஆரல் விழா

பரணி தீபம் – முக்கூட்டு விளக்கு

போதாயன அமாவாசை – போதாயனக் காருவா

சுப்ரமண்ய ஷஷ்டி – முருக அறமி

சம்பா ஷஷ்டி – சம்பா அறமி

தனுர்பூஜை ஆரம்பம் – சிலைப்பூசைத் தொடக்கம்

நடராஜர் ஆருத்தரா அபிஷேகம் – அம்பலவாணர் மூதிரைத் திருமுழுக்கு

போகிப் பண்டிகை – வேந்தன் திருநாள்

சங்கராந்தி – பொங்கல் பண்டிகை

த்வஜ ஆரோஹணம் – கொடி ஏற்றம்

மேஷ லக்னம் – மேழ ஓரை

முகூர்த்தம் – முழுத்தம்

மகாசிவராத்திரி – சிவனார் பேரிரவு

ஜல்லிக்கட்டு – சல்லிக்கட்டு

சர்வபீஷ்வ ஏகாதசி – அனைத்து வீடுமப் பதினொரமை

பிரம்மோற்சவ கிராமசாந்தி – பெருவிழா ஊர்ச்சமந்தி

பாரிவேட்டை– பரிவேட்டை

பேஷ்கார்,மணியம்,காரியஸ்தர் – செயல்பணியர், பெருங்கேள்வி மணியம்,கருமத்தலைவர்

சர்வஏகாதசி – அனைத்துப் பதினொரமை

மூலஸ்தானம் – கருஇடம், மூலத்தாவு

சந்நிதி – திருமுன்

பிரகாரம்– திருச்சுற்று

அஷ்டோத்தர அர்ச்சனை – நூற்றெட்டு வழிபாடு

சகஸ்ரநாமம் – ஆயிரப் பெயர்

கௌபீனம் – நீர்ச்சீலை, குளிசீலை, தாய்ச்சீலை

தீபாராதனை – விளக்கு வழிபாடு

இராஜஅலங்காரம் – அரசக்கோலம், அரசப்புனைவு

தரிசனம் – காண்பு, காட்சி

பிரசாதம் – அருட்கொடை, திருச்சோறு

(பாவாணர் தமிழ்க் களஞ்சியம் 46)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் புதிய இயக்குநராக முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் 23.08.2021 ஆம் நாள் முற்பகல் முதல் பொறுப்பெற்றுச் செயலாற்றிவருகிறார்.

# பொருள்திரி சொற்கள்



உலகிலுள்ள ஒவ்வொரு பொருட்கும் மக்கள் உள்ளத்திலெழும் ஒவ்வொரு கருத்திற்கும் ஒவ்வொரு சொல்தோன்றுவது, மொழிவளர்ச்சிக்கு இன்றியமையாததாகும். ஆயினும், ஒவ்வொரு கருத்திற்கும் ஒவ்வொரு புதுச்சொல் அமைவது இயலாது. பழஞ்சொற்களினின்றே புதுச்சொற்கள் திரித்துக்கொள்ளல் வேண்டும். கருத்துகள் ஒன்றோடொன்று தொடர்புற்றிருப்பதால், அவற்றைக் குறிக்கும் சொற்களும் தொடர்புற்றிருப்பது பொருத்தமே.

கருத்துகள் பல்கப் பல்கச் சொற்களும் பல்க வேண்டியிருப்பதால், ஒருமொழி முழுவளர்ச்சியடைவதற்குப் பல்லாயிரக்கணக்கான திரிசொற்கள் தேவையாயுள்ளன. பழஞ் சொல்லினின்று புதுச்சொல் திரிக்க ஏந்தில்லாவிடத்து, ஒருசொல்லே தொடர்புள்ள பலபொருள்களைக் குறிக்க நேர்கின்றது. இங்ஙனம், பொருள்திரியினும் சொல்திரியாத பெயரே ஆகுபெயர் எனப்படும்.

சொற்கள் காரணம்பற்றியும் ஆட்சிபற்றியும் பொருளுணர்த்தும். காரணம்பற்றிப் பொருளுணர்த்துவதே சொல்லுக்குச் சிறப்பாயினும், பொருளுணர்த்துங் குறியே சொல்லாதலின், சிறுபான்மை ஆட்சிபற்றியும் சொல்பொருளையுணர்த்துமாறு பயன்படுத்தப்பெறும். அவ்வாட்சியும் காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்றவாறு வேறுபடும். ஆட்சிப்பொருள், ஆள்வான் கருத்திற்கேற்றபடியும், ஆளும்சொல் குறிக்கும். பொருளின் நிலைமைக்கேற்றபடியும், (1) உயர்பு, (2) இழிபு, (3) பொது, (4) வரையறுப்பு, (5) விரிப்பு என ஐந்நிலைமைப்படும்.

**1. உயர்பு** (Elevation)

அரசனே தெய்வமாக வணங்கப்பட்ட முதற்காலத் தில், இறைவன் என்பது அரசனையும் கோவில் (அல்லதுகோயில்) என்பது அரசனுடைய அரண்மனையையும் குறித்தன. பின்னர், கடவுளுணர்ச்சியேற்பட்டபின் அவை இரண்டும் முறையே கடவுளையும் அவரிருக்கையாகக் கருதப்படும் வீட்டையும் குறித்தன.

தொண்டன், அடியான் என்ற பெயர்களும், முதலாவது மக்கட்குத் தொண்டும் அடித்தொழிலும் செய்தவர்களைக் குறித்து, பின்னர், கடவுள் தொண்டரையும் கடவுளடியாரையும் குறித்தன. தொண்டன் என்னும் பெயர், இன்று பொதுநல ஊழியனையுங் குறிக்கும்.

களிப்பு என்னுஞ்சொல், முதலாவது, கள்ளுண்டலையே குறித்து, பின்பு கள்ளுண்டு மகிழ்தலையும், அதன்பின் இன்பத்தால் மகிழ்தலையும் குறித்தது.

மேற்காட்டிய ஐஞ்சொற்களும், முதலாவது தாழ்ந்தபொருள்களைக் குறித்து, பின்னர் உயர்ந்த பொருள்களைக் கொண்டமை காண்க. இங்ஙனம், சொற்பொருள் உயர்வதே உயர்பு எனப்படும்.

**தொடரும்...**

**(பாவாணர் தமிழ்க் களஞ்சியம் 21)**

1

# சங்க இலக்கியத்தில் மூதாளர்


முனைவர் பா.ஜெய்கணேஷ்
தமிழ்த்துறைத்தலைவர், எஸ்.ஆர்.எம். கல்விநிறுவனம், காட்டங்குளத்தூர்.


**முன்னுரை:**

சங்க இலக்கியத்தில் முதியை[1], முதியோள்[2], முதியன்[3], முதியர்/ முதியரும்[4], முதியவன்[5], முதியோர்[6],முதிர்ந்தவன்[7], முதிர்ந்தோர்[8], மூத்தோன்/ மூத்தோர்[9], மூதாளர் முதலான சொற்கள் அகவையில் மூத்தோரைக் குறிப்பிடப் பயன்பட்ட சொற்களாக உள்ளன.

இவற்றில்இன்றளவில்பெரிதும் புழக்கத்தில் இல்லாத சொல்லாக இருப்பது மூதாளர் என்னும் சொல்.முதியர், முதியோர், மூத்தோர், மூதாளர் ஆகிய சொற்கள் அகவையில் மூத்த ஒருவரைக் குறிப்பிடப்பயன்படாமல் பலரை ஒன்றாக இணைத்துக் கூறும் சொற்களாகவே சங்க இலக்கியத்தில் பதிவு பெற்றுள்ளன.

சங்க இலக்கியத்தில் இருந்த இந்தநான்கு சொற்களில் மற்றமூன்று சொற்களும் இன்றும் வழக்கில் வழங்கிவரக்கூடிய சொற்களாக உள்ளன. இதில் மூதாளர் என்ற சொல் மட்டும் இன்று பெரிதாக வழக்கில் இல்லை. மூதாளர் என்றசொல் சங்க இலக்கியத்தில் புலவர்களால் எவ்வாறு ஆளப்பெற்றுள்ளது என்பதை விளக்குவதாக இக்கட்டுரைஅமைகிறது.



**மூதாளர்:**

சங்கஇலக்கியத்தில்முதியர்என்ற சொல் 8 இடங்களிலும், முதியோர்என்றசொல் 1 இடத்திலும், மூத்தோர்என்றசொல் 3 இடங்களிலும், மூதாளர் என்றசொல் 4 இடங்களிலும்பயின்றுவந்துள்ளன.

இதில் இன்றுபெருவழக்கற்றுப் போன மூதாளர் என்ற சொல் எட்டுத்தொகையில் அகநானூறு, புறநானூறு ஆகியவனவற்றிலும் பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டிலும் பயின்று வருகின்றது. மற்ற சங்க இலக்கிய நூல்களில் எங்கும் மூதாளர் என்ற சொல் இடம் பெறவில்லை.

மூதாளர் என்ற சொல்லை அகநானூற்றின் 366, 377 ஆகியபாடல்களும் புறநானூற்றின்52 ஆம்பாடலும், முல்லைப்பாட்டின் 54ஆம்அடியும் குறிப்பிட்டு உரைக்கின்றன.

மருதம்குடவாயில்கீரத்தனார், பாலை மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனார், மருதன் இளநாகனார், நப்பூதனார் ஆகிய நான்கு புலவர்கள் மூதாளர் என்னும் சொல்லைப் பயன்படுத்தியிருப்பதை அறியமுடிகிறது.

**பெரு மூதாளர் ஏமம் சூழ  முல்.54**
**நரை மூதாளர் கை பிணி விடுத்து  அகம்.366/10**
**நரை மூதாளர் அதிர் தலை இறக்கி  அகம்.377/7**
**நரை மூதாளர் நாய் இட குழிந்த  புறம்.52/14**

அகவை முதிர்ந்தவர்களை ஒன்றிணைத்துக் குறிப்பிட பெருமூதாளர் என்று ஓரிடத்திலும், நரைமூதாளர் என்று மூன்று இடங்களிலும் பதிவுசெய்கிறது சங்கஇலக்கியம்.

**எட்டுத்தொகையில்மூதாளர்:**

அகநானூறு 366 ஆம்பாடலில் மருதநிலத்தில் இருக்கக்கூடிய வைக்கோல் போரிலிருந்த சிறு துரும்புகள் நெய்தல் நிலஉப்பளங்களில் உள்ள சிறிய பாத்திகளில் போய் விழுந்து விடுகின்றன. இதனால் உப்புக் கெட்டுவிடுகிறது. சினம் கொண்டநுளையர்கள் உழவர்களுடன் சண்டை இடுகின்றனர்.

சேற்றுக்குழம்பினை ஒருவர் மீது ஒருவர் வாரிஎறிந்து சண்டையிடுகின் றனர். இதனைக் கண்ட நரைமூதாளர் மருத நிலமக்களைச் சண்டையிலிருந்து விலக்கி விடுகின்றனர். முற்றிய தேனான கள்ளினை நெய்தல்நில மக்களுக்குஅளிக்கின்றனர்.

இந்தப் பாடலில் மூதாளர் மருதநில உழவர்களுக்கும், நெய்தல் நில நுளையர்களுக்கும் இடையில் நடக்கின்ற சண்டையை விலக்கியும் தடுத்தும் நிறுத்துபவர்களாக உள்ளனர் என்று கூறுகின்றது. இதனை,

**கழனி உழவரொடு மாறுஎதிர்ந்து, மயங்கி**
**இருஞ்சேற்று அள்ளல்எறி செருக் கண்டு**
**நரை மூதாளர் கை பிணி விடுத்து**
**நனைமுதிர் தேறல் நுளையர்க்கு ஈயும்...**
**(பா.எண்.366, அடி, 7  11)**

என்னும் பாடல்வழி அறிய முடிகிறது. இதேபோல் அகநானூற்றின் மற்றொரு பாடல் மூதாளர் என்பவரைப் பாழ்மண்டபத்தில் சூதாடுபவர்களாகக் குறிப்பிட்டுச் செல்கின்றது.

**கொழும் குடி போகிய பெரும் பாழ் மன்றத்து**



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு:

**நரை மூதாளர் அதிர் தலை இறக்கி**
**கவை மனத்து இருத்தும் வல்லு வனப்பு அழிய**
என்னும்அகநானூற்றின் 377 ஆம்பாடல்

பாழ் மன்றத்தில் நரைமூதாளர் நடுக்கம் தரக்கூடிய தமது தலையைத்தாழ்த்தி,தாம் வெல்வோமா, தோற்போமா என்று இருநிலைப் பட்டமனத்துடன் சூதாடும் அந்த இடத்தின்அழகு கெடுமாறு இருக்கக் கூடிய என்று விவரித்துச் செல்கின்றது. இந்த இடத்தில் மூதாளர் என்பவர்கள் சூதாடுபவர்களாகச் சுட்டப்படுகின்றனர்.

மற்றொரு புறநானூற்றுப்பாடலில் மருதன் இளநாகனார் வழுதி என்னும் மன்னனுக்கு அறிவுரை கூறுவது போன்று அமையும் இடத்தில் மூதாளர் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இந்தப்பாடலில் "ஊர்கள்தோறும் மீனைச் சுடுவதால் எழும்பும் புகையின் புலால் நாறும் நெடிய சுருள்வயல் அருகிலுள்ள மருதமரத்தின் வளைந்த கிளைகளைச் சூழுகின்றபெரிய நல்ல புதுவருவாயினை இழந்து, இப்பொழுதுஆரவார இசை பொருந்திய தெய்வங்கள் தாம் உறையும் தூண்களைவிட்டு நீங்கித்தாம் பலிபெறும் இடங்களை மாற்றிக்கொள்ளும் பாழ்பட்ட அம்பலங்களில் நரையையுடைய முதியோர் சூதாடும் காய்களை வைத்ததால் குழிவாய்ப் போன சூதாடுமிடம் நிறைய, பல பொறிகளைக் கொண்டகாட்டுக்கோழி முட்டை யிடும் காடாய்ப்போய்க் கெடும் நாட்டினையுடையோரில்" (பாண்டியராஜா, சங்கச்சோலை) என்ற விளக்கத்தின் மூலம் அறியமுடிகிறது. இதனை எடுத்துரைக்கும் அப்பாடல்,

**கலி கெழு கடவுள் கந்தம் கைவிட**
**பலி கண்மாறிய பாழ்படு பொதியில்**
**நரை மூதாளர் நாய் இட குழிந்த**
**வல்லின் நல் அகம் நிறைய பல் பொறி**
**வல்லின் நல் அகம் நிறைய பல் பொறி**
**கான வாரணம் ஈனும்**
**காடு ஆகி விளியும் நாடு உடையோரே**
(பா. எண்.52, அடி, 12 17)

என்னும் புறநானூற்றுப் பாடலாகும். இந்தப் பாடலிலும் மூதாளர் என்பவர் பாழ்மண்டபங்களில் சூதாடுபவர்களாகச் சுட்டப்படுகின்றனர்.

### பத்துப்பாட்டில் மூதாளர்:

எட்டுத்தொகைநூல்களைத்தொடர்ந்து பத்துப்பாட்டில்மூதாளர்பற்றியகுறிப்புஓர் இடத்தில் மட்டுமே பதிவு பெற்றுள்ளது. முல்லைப் பாட்டின் 54 ஆம் அடியில் பெருமூதாளர் என்று சுட்டப்பட்டுள்ளது. இந்தப்பெருமூதாளர்தூக்கக் கலக்கத்திலும் விரைப்பானநடையுடையவர் களாக அரசனைச் சூழ்ந்து மெய்க் காப்பாளர்களாக வலம் வருகின்றனர் என்று முல்லைப்பாட்டு குறிப்பிடுகிறது.

**துகில் முடித்து போர்த்த தூங்கல் ஓங்கு நடை**
**பெரு மூதாளர் ஏமம் சூழ**
**பொழுது அளந்து அறியும் பொய்யா மாக்கள்.**
**(முல்லைப்பாட்டு,** அடி, 52 54)

என்ற அடிகளின் மூலம் மூதாளர் அரசனின் பட்டறிவுவாய்ந்த பாதுகாவலர்களாக இருந்துள்ளனர் என்பதையும் அறிய முடிகிறது.





**முடிவுரை**

- சங்க இலக்கியத்தில் அகவையில் பெரியவர்களைக் குறிப்பிட பலசொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. அவற்றில் மூதாளர்என்றசொல் தனித்துக் குறிப்பிடத்தக்க சொல்லாக அமைகின்றது.
- மூதாளர் என்றசொல் முதியவர்கள் பலரைக் குறிப்பிடக்கூடிய சொல்லாகப் பயன்படுத்தப்பட்டிருப் பதைச் சங்கஇலக்கியம் வழியாகஅறியமுடிகிறது.
- இவர்கள் பெருமூதாளர் என்றும் நரை மூதாளர் என்றும் புலவர்களால் பாடப்பட்டுள்ளனர்.
- இந்த மூதாளர்சண்டையைவிலக்கி விடுபவர்களாகவும், பாழ்மண்டபத்தில் சூதாடுபவர்களாகவும், அரசனின் பட்டறிவு வாய்ந்த பாதுகாவலர்களாகவும் இருந்துள்ளனர் என்பதைச் சங்க இலக்கியம் பதிவு செய்கின்றது.
- வழக்கிலிருந்துதொலைதூரம்போய்விட்ட மூதாளர் என்ற சொல்லைமீண்டும் இன்றைய காலத்தில் நடைபோடவைப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

**சான்றெண்விளக்கம்**

1. **முதியை**முதியை என்போர்க்கு முதுமை தோன்றலும் பரி. 2/23
2. **முதியோள்** வால் நரை கூந்தல் முதியோள் சிறுவன் புறம். 277/2

முளரி மருங்கின் முதியோள் சிறுவன் புறம். 278/2

3. **முதியன்**செல்வுஉழி எழாஅ நல் ஏர் முதியன்/ ஆதனுங்கன் போல நீயும் புறம். 389/12,13
4. **முதியர்/ முதியரும்**

இளம் துணை புதல்வரின் முதியர் பேணி பதி. 70/21
முதியர் இளையர் முகை பருவத்தர் பரி. 10/19
முதியர் பேணிய உதியஞ்சேரல் அகம். 233/8
இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி பெரும். 268
இளையரும் முதியரும் கிளையுடன் குழீஇ நற். 207/7
இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி அகம். 30/4
இளையரும் முதியரும் கிளையுடன் குழீஇ அகம். 348/12
இளையரும் முதியரும் வேறு புலம் படர புறம். 254/1

5. **முதியவன்**

தொடங்கல்கண் தோன்றிய முதியவன் முதலாக கலி. 2/1
முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால் கலி. 25/2

6. **முதியோர்**

இளையோர் வண்டல் அயரவும் முதியோர்/அவை புகு பொழுதில் தம் பகை முரண் செலவும் பொரு. 187,188

7. **முதிர்ந்தவன்**

கல்லாது முதிர்ந்தவன் கண் இல்லா நெஞ்சம் போல் கலி. 130/6

8. **முதிர்ந்தோர்**

முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார் நற். 314/1

9. **மூத்தோன்/மூத்தோர்**

மூத்தோன் வருக என்னாது அவருள் புறம். 183/6
மூத்தோர் அன்ன வெண் தலை புணரி அகம். 90/1
மூத்தோர் மூத்தோர் கூற்றம் உய்த்து என புறம். 75/1
மூத்தோர் மூத்தோர் கூற்றம் உய்த்து என புறம். 75/1

**துணைநூல்பட்டியல்**

1. பசுபதி, ம.வே., செம்மொழித் தமிழ்இலக்கண இலக்கியங்கள், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2010.
2. மாதையன், பெ., சங்கஇலக்கியச்சொல்லடைவு, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2007.

**இணையம்**

1. பாண்டியராஜா, ப., தமிழ்இலக்கியத்தொடரடைவு, <http://tamilconcordance.in>
2. பாண்டியராஜா, ப., சங்கச்சோலை, <http://sangacholai.in>

# சொற்குவையின் சொல் எண்ணிக்கை 4,30,186 ஆக உயர்வு!

தமிழ்மொழியின் சொல் வளத்தைப் பெருக்கி உலக அரங்கில் அதன் பெருமையை நிலைநிறுத்த வேண்டும் என்ற மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு.மு.க.ஸ்டாலின் அவர்களின் எண்ணத்திற்குச் செயல் வடிவம் கொடுக்கும் வகையில், மாண்புமிகு தொழில்கள், தமிழ் ஆட்சிமொழி (ம) தமிழ்ப்பண்பாடு மற்றும் தொல்லியல் துறை அமைச்சர் திரு. தங்கம் தென்னரசு அவர்களின் நெறிப்படுத்தலின்படியும், தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசு செயலாளர் திரு. மகேசன் காசிராசன் இ.ஆ.ப.அவர்களின் வழிகாட்டுதலின்படியும் சொற்குவையில் உள்ள தமிழ்ச்சொற்களின் எண்ணிக்கையைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

அதன்படி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சொற்குவை வலைத்தளத்தில் 03.09.2021 ஆம் நாள், கார்க்கி ஆராய்ச்சி நிறுவனத்தின் ஒத்துழைப்புடன் 38,504 சொற்கள் கூடுதலாகப் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. இதனால் சொற்குவையின் சொல் எண்ணிக்கை 3,91,682இல் இருந்து இப்போது 4,30,186 ஆக உயர்ந்துள்ளது.

இச்சொற்களைத் தமிழ்கூறும் நல்லுலகு பயன்கொள்ளுமாறும், தமிழின் சொல்வளத்தை மேலும் பெருக்குவதற்கு ஏதுவாக, தமிழன்பர்களும் தமிழார்வலர்களும் தமிழமைப்புகளும் தங்களிடம் உள்ள அகராதிகளை மென்படியாகவோ (Soft Copy), பட வடிவிலோ (PDF) வழங்கி, தமிழ்ப்பணிக்குத் தங்களின் பங்களிப்பை நல்குமாறும் அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

இயக்குநர்






**சுய் அற்கின்ஸ்**

| | | |
|---|---|---|
| தோற்றம் | : | 23.01.1931 |
| மறைவு | : | 03.092021 ( அகவை 90 ) |
| குடியுரிமை | : | பிரித்தானியம் |
| கல்வி | : | Edinburgh University |
| பணி | : | அகராதியியலாளர் |

# அகராதியியல் அவ்வை அற்கின்ஸ் மறைவு

சுய் அற்கின்ஸ் – Sue Atkins (1931-2021)

அகராதியியல் உலகில் மிகவும் புகழ்பெற்ற முதிய அகராதியியலாளர் சுய் அற்கின்ஸ். ஆங்கிலேயரான இவர் 1966 இலிருந்து தொழிலியல் அடிப்படையில் நீண்டகால அகராதியியலாளராகப் பேசப்பட்டு வந்தவர். இக்கால அகராதியியல் அறிஞர்களில் இருமொழி அகராதிகளைத் தொகுப்பதில் பெயரெடுத்தவர். குறிப்பாக, ஐரோப்பாவில் முன்னிலைப் பதிப்பகங்களாக விளங்கிய பதிப்பகங்களுக்கு உலகில் முதன்நிலை மொழிகளான ஆங்கிலம்– பிரெஞ்சு (Harper - Collins, Collins- Robert, Oxford- Hachette) அகரமுதலிகளைத் தொகுப்பதில் முதன்நிலையில் இருந்தவர். ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகம், கலிஃபோர்னியா பல்கலைக் கழகம் மற்றும் பன்னாட்டு அகராதியியல் ஆய்விதழ் (International Journal of Lexicography) ஆகியவற்றில் அகராதியியல் ஆலோசகராகவும் திகழ்ந்தவர்.

மேலும், அற்கின்ஸுக்குப் பிறைட்டன் பல்கலைக்கழகம் University of Brighton 2000ஆம் ஆண்டில் அகராதியியலில் முதுமுனைவர் பட்டம் வழங்கிப் பெருமை அளித்தது. அகராதியியலில் சகஅறிஞரான மைக்கஏல் றுன்டெல் Michael Rundell என்பவருடன் இணைந்து, The Oxford Guide to Practical Lexicography எனும் அரும்பெரும் நூலை அகராதியியல் உலகிற்கு ஈந்தவர். இந்நூலானது Oxford University பதிப்பகம் வெளியிட்ட சிறப்பு நிலையை எய்தியது. இவர் ஐரோப்பிய அகராதியியல் வளர்ச்சியில் அதிக ஈடுபாடு காட்டுவதிலும், ஐரோப்பிய அகராதியியல் மாநாடுகளை ஏற்பாடு செய்வதிலும் ஓயாது உழைத்தவர். ஐரோப்பிய அகராதியியல் கழகத்துத்(European Association for Lexicography) தலைவராக இயங்கியதோடு கடைசிநாள் வரைக்கும் அதன்வாழ்நாள் உறுப்பினராகவும் செயற்பட்டவர் சுய்அற்கின்ஸ் அவ்வை.